

# வடு

வீட்டுக்குத் திரும்பிப் போகவே முடியாதோ என்ற பயம் அதிகமானபோது திரும்பவும் ஒரு பையன் பந்தை மைதானத்தை விட்டு வெளியே உதைத்திருந்தான். எல்லா நாளையும் போல அக்கா கூடவே வீட்டுக்குப் போகாமல் மைதானத்தில் விளை யாடும் பையன்களை வேடிக்கை பார்த்தபடி நின்றிருந்தேன். நான்காம் வகுப்பில் என்னோடு படிக்கும் மாணவர்களில் சிலர் மைதானத்து மூலை மரத்தடியில் எதையோ மனனம் செய்து கொண்டிருந்தார்கள். நான் முதலில் வேடிக்கை பார்த்துக் கொண்டு மட்டுமே இருந்தேன். அக்கா வகுப்புக்காரன் ஒருவன் தான் என்னைப் பந்து எடுத்துப் போடச் சொன்னான். மைதானத்துக்கு வெளியே அடர்ந்த புதர்ச்செடிகளுக்குள் பந்து போனால், தேடி எடுத்துப் போட வேண்டும். பெயர் தெரியா பூச்சிகளும், ஓணான்களும் பதுங்கிய புதரில் பந்தைத் தேடி எடுப்பது பயமாக இருக்கும். திரும்பத் திரும்ப பந்தை எடுத்துப் போடுவது தாள முடியாத அழுகையை உண்டாக்கிவிடுவதாக இருந்தது. வெயிலடங்கி இருட்டு பரவத் தொடங்கியதும் அவர்களிடம் மாட்டிக்கொண்டுவிட்டோமா என பயம் அதிக மானது. அவர்கள் கால்பந்து விளையாடிக்கொண்டே இருந் தார்கள். நான் வீட்டுக்குப் போக வேண்டுமென அழத் தொடங் கியதும் விளையாடும் மூன்று பையன்கள் என்னைச் சுற்றி நின்றுகொண்டு மிரட்டினார்கள். நான் அவர்கள் முகத்தைக் கூடப் பார்க்கப் பயந்தேன். ஒருவன் என் தோளை அழுத்திப் பிடித்துச் சொன்னான்,

‘போடா... போ, வீட்டுக்குப் போயி தூங்கு; காலையிலே பொம்பளைப் பிள்ளையாயிருவே... போ.’ மற்ற பையன்கள் என்னை முறைத்தபடி அதையே திரும்பச் சொன்னார்கள்.

உதட்டைக் கடித்தபடி அழுதேன். அதே பையன் திரும்பவும் சொன்னான்,

'நாளைக்கு நீ பொம்பளைப் பிள்ளையாத்தான் ஸ்கூலுக்கு வருவே. அப்போ பாத்துக்கறேன். போடா.''

நான் மைதானத்தின் பெரிய பரப்பில் தனியாக நடக்க நடக்க உடம்பு நடுங்கத் தொடங்கியது. தொண்டையெல்லாம் வலித்தது. உதடு விம்ம நான் அங்கிருந்து தப்பிவிட நினைத்துத் திரும்பாமல் ஓடினேன். வீட்டுக்கு வரும் தெருவில் இரவு நீண்டிருந்தது. நாளைக் காலையில் பெண்பிள்ளையாக மாறிவிடப் போகிறோம் என்ற வேதனை தாங்க முடியாததாக இருந்தது. வீட்டின் முன்னறையில் பெரிய அக்கா படித்துக் கொண்டிருந்தாள். அம்மாவின் அறைக்குள் போய் என்ன செய்வதென அறியாமல் கண்ணாடியில் என்னையே பார்த்துக் கொண்டிருந்தேன். அம்மா அறைக்குள் எட்டிப் பார்த்துவிட்டு சமையலறைக்குள் வரச் சொன்னாள். யாரிடமாவது சொல்லி அழ வேண்டும் போல் இருந்தது. வெட்கமாகவும் தாங்க முடியாத வேதனை தருவதாகவுமிருந்தது. அம்மா என் கண்களையே கவனித்தாள். பின் கேட்டாள்,

'மைதானத்தில் பசங்க திட்டுனாங்களா?'

பதில் பேச முடியவில்லை. இல்லையெனத் தலையாட்டினேன். முகத்தைக் கழுவி வர குளியல் அறைக்குள் போய்த் தண்ணீரைத் தொட்டதும், வலி இன்னமும் அதிகமானது. இன்றைக்குத் தூங்கவே கூடாது. விழித்துக்கொண்டே இருந்தால் பொம்பளைப் பிள்ளையாவதிலிருந்து தப்பிவிடலாமே என்ற யோசனை வந்தது. யாரோடும் பேச விருப்பமற்றவனாக சாமி ரூம் பக்கம் உட்கார்ந்து புத்தகத்தைக் கையில் வைத்துக்கொண்டு, காப்பாற்றும்படி மனத்திற்குள் ஏதேதோ கடவுள்களின் பெயரை முணுமுணுத்துக்கொண்டே இருந்தேன். அக்கா அப்போதுதான் முதன்முதலாகப் பார்ப்பது போல என்னைப் பார்த்துக் கொண்டிருந்தாள். என் உதடு அசையவேயில்லை. கல்சட்டியில் ஏதோ வறுபடும் மணம் வீடெங்கும் நிரம்பிக்கொண்டிருந்தது. சாப்பிட்டால் தூக்கம் வந்துவிடுமென்பதால் சாப்பிடாமலே எங்காவது ஓடிவிட வேண்டுமென நினைத்தேன். சி.கே. சுப்பு என்ற பையன் வீட்டு ஞாபகம் வந்தது. நிழலைப் போல சப்தமின்றி வீட்டிலிருந்து இறங்கி, சுப்பு வீடுள்ள தெருவை

நோக்கி நடந்தேன். தெருக்கள் மயக்கமூட்டுவதாக இருந்தன. தெருவில் சில சிறுமிகள் தண்ணீர்ப் பானைகளோடு கடந்து போனார்கள். சுப்புவின் வீட்டுக்குள் திடீரெனப் போக முடியாது. வீட்டைப் பார்த்தபடி நின்றபோது சுப்புவின் தம்பி என்னைப் பார்த்திருக்க வேண்டும். அவன் சுப்புவைக் கூட்டிவந்து விட்டான்.

எல்லா நாளையும் போலவே சுப்பு என் தோள் மீது கையைப் போட்டுக்கொண்டு வீட்டுக்குள் கூட்டிப்போனான். சுப்புவின் வீட்டில் மாடி இருந்தது. மர ஏணி வழியாக மேலே ஏறிப்போன போது பஞ்சுப் பொதிகள் கிடந்தன. நார்க்கட்டிலில் அவன் என்னை உட்காரச் சொல்லிவிட்டு, வெல்லத் துண்டை சாப்பிடத் தந்தான். சுவையேயில்லை. நாவெல்லாம் பயத்தில் கசப்பு பீறிட்டுக்கொண்டிருந்தது. அவன் என் கழுத்தடியில் கை வைத்துச் சுடுகிறதா... எனக் கேட்டதற்கு மௌனமாகத் தலையாட்டினேன். சுப்பு சார்வாள் குறித்துத் தந்த பாடங்களை வரிசையாகப் படித்துக்கொண்டே வந்தான்.

எனக்கு அவன் குரல் தூரத்தில் கேட்டது. அவனிடம் சொல்லி விட வேண்டுமென்ற தவிப்பு கூடியது. சுப்புவை சாப்பிடக் கூப்பிட்டார்கள். நான் சாப்பிட்டு வந்ததாகப் பொய் சொன்ன பிறகு அவன் மட்டும் தனித்துக் கீழே சென்றான். சிம்னி விளக்கு பதற்றத்தோடு எரிவது போல இருந்தது. மிகுந்த வேதனையும் உடம்பெல்லாம் தோன்றித் தோன்றி மறையும் வலியும் கூடியது. நாய்கள் தெருவில் உலவத் தொடங்கின. ஊர் மெல்ல நிசப்தத்தில் மூழ்கத் தொடங்கியது. இங்கேயே படுத்துக் கொள்கிறாயா என்று சுப்பு கேட்டதற்குத் தலையாட்டியபோது அவன் திரும்பவும் சுடுகிறதா என உடம்பைத் தொட்டுப் பார்த்தான். இரவு மிக மெதுவாக நிரம்பிக்கொண்டிருந்தது. அப்பா என்னைத் தேடி வந்திருக்கக் கூடும் போல, குரல் கேட்டது. நான் கீழே போனபோது அப்பாவும் சின்ன அக்காவும் நின்றிருந்தார்கள். அக்கா கையில் அரிக்கேன் விளக்கு எரிந்து கொண்டிருந்தது. அப்பா, படித்து முடித்துவிட்டாயா என இறுகிய குரலில் கேட்டார். விளக்கின் வெளிச்சம் தெருவையே ஊசலாடச் செய்தது. பூத நிழல்களாக உருவெடுத்து நாங்கள் நடந்தோம். அம்மா வேலை செய்துகொண்டுதானிருந்தாள். யாவரும் படுக்கையை விரித்திருந்தார்கள். சுப்பு வீட்டில் சாப்பிட்டதாகச் சொல்லி, அக்காக்களுக்கு இடையே படுத்துக் கொண்டேன். அம்மா தனியே சாப்பிடும் மணம் கசிந்தது. எப்படி

இந்த பயத்தை நிறுத்துவது? யாரால் நான் பெண்ணாக மாறுவதை நிறுத்திவிட முடியுமெனத் தெரியாமல் தலையணையில் முகத்தைப் புதைத்து சப்தம் வராமல் எனக்கு நானே பேசிக்கொண்டிருந்தேன். உறங்கக் கூடாது. கூடவே கூடாது என மந்திரம் போலவே புலம்பினேன். எல்லா விளக்குகளும் அணைக்கப்பட்டுவிட்டன. அம்மா படுக்கைக்கு வந்திருந்தாள். அறையில் வெம்மை ஏறிக்கொண்டிருந்தது. தூக்கம் என் உடலின் மீதேறி சிகை வரை ஊர்ந்துகொண்டிருந்தது. கண்கள் திறக்க மறுத்து நடுங்கின. செய்வதறியாமல் பிதற்றினேன்.

எல்லோரும் உறங்கியிருந்தார்கள். இரவு ஒரு நதியைப் போல வீடெங்கும் ஓடிக்கொண்டிருந்தது.

'வேண்டாம். காப்பாற்ற முடியலையே... அய்யோ...' என அரற்றினேன். கனவில் பீறிடும் வார்த்தைகளைப் போல அவை வெடித்து வெளிப்பட்டிருக்கக் கூடும். அம்மாவின் குளிர்ந்த கைகள் என்னைத் தொட்டு எழுப்பின.

'என்னடா, பினாத்துறே... எதாவது சொப்பனம் கண்டாயா?' நான் விழித்து உட்கார்ந்துகொண்டேன். அம்மாவிடம் எதையும் மறைக்கக் கூடாதெனச் சொல்லிவிட முயன்றேன். விசும்பி விசும்பி அழுவது மட்டுமே நடந்தது. அம்மா செய்வதறியாது தேற்றியபடி என்னடா என்ன எனக் கேட்டுக்கொண்டே இருந்தாள். அழுகையும், உடைந்த குரலுமாக நான் பெண் பிள்ளையாக மாறிவிடுவேன் எனப் பையன்கள் மிரட்டியதைச் சொன்னதும், அம்மா என் தலையை வருடியவளாகச் சொன்னாள்,

'நல்லதுதானடா... மூணும் பொண்ணா போச்சுன்னு சந்தோஷமா இருப்பேன். அக்கா டிரஸ், நகை எல்லாம் நீயும் போட்டுக்கலாம். நிறைய வளையல் கொலுசு கூட போட்டுக் கலாம், ஜடை போட்டுக்கலாம். பிறகு என்னடா பயம்?'

அம்மா பேசப் பேச பயம் கலைந்து வசீகரம் தொடங்கியது. அம்மாவின் விரல்கள் தலையில் முன்பின்னாக ஊர்ந்து கொண்டே இருந்தன. தூங்கும் அக்காக்களைப் பார்த்துக் கொண்டே இருந்தேன். கனவின் மிருதுவைக் குடித்து மயங்கியிருந்தார்கள். அம்மா என்னைக் கட்டிக்கொண்டபடி 'வாடி என் செல்லக் கடைக் குட்டி' என இறுக அணைத்தாள். வேதனை வடிந்துகொண்டேயிருந்தது. அம்மாவின் கேசத்தை முகமெங்கும் பரப்பிக்கொண்டு

தூங்கத் தொடங்கியிருந்தேன். உறக்கம் கலைந்து எழுந்தபோது நான் மட்டும் பாயில் படுத்துக் கொண்டிருந்தேன். அம்மாவும் அக்காக்களும் சமையலறை வேலைகளில் இருந்தார்கள். அவசரமாகக் கண்ணாடியில் போய்ப் பார்த்தபோது நான் பையனாகவே இருந்தேன். பெண்ணாக மாறியிருக்கக் கூடாதா என ஏக்கமாக இருந்தது. உடம்பில் பதியாத அந்த வடுவோடு ஒருபோதும் வேறு உரு மாற முடியாத ஒரு பையன் நான் என, அன்றுதான் முதன்முதலாக என்னை அறிந்தேன். வெட்கமாக வும், சொல்ல முடியாத வேதனை தருவதாகவும் அது இருந்தது.